மார்க்க அரேலியர்

# ஆத்ம சிந்தனை



சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

முதற் பதிப்பு — 1935 டிசம்பர்
இரண்டாம் பதிப்பு— 1937 அக்டோபர்

சென்னை அரசாங்க முதல் மந்திரி
சக்ரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார் இயற்றிய

# அரிய நூல்கள்

---

| | |
|---|---|
| ஆத்ம சிந்தனை | 0—8—0 |
| கண்ணன் காட்டிய வழி | 0—8—0 |
| குட்டிக் கதைகள் | 0-12—0 |
| உபநிஷதப் பலகணி | 0—8—0 |

“லோகோபகாரி”
சிந்தாத்திரிப்பேட்டை, சென்னை.

உ

ரோமாபுரிச் சக்ரவர்த்தியும் ராஜரிஷியு மான

மார்க்க அரேலியர்

# ஆத்ம சிந்தனை

சக்கரவர்த்தி இராஜகோபாலாச்சாரியார்
மொழி பெயர்ப்பு.



வேதம் அண் கோ.,
89. மோகல் வீதி, இரங்கூன்.
லோகோபகாரி
சிந்தாத்திரிப்பேட்டை
சென்னை.

செப்டம்பர் 1937] [விலை அணு 8

# பதிப்புரை

பொன்னும் பொருளும் கொடுத்தல் எல்லோருக்கும் முடியாது. ஆனால், நல்லெண்ணங்களை மக்கள் உள்ளங்களில் பரவச் செய்து, அவர்கள் நல்வாழ்வு வாழுமாறு துணைபுரிதல் பொன்னையும் பொருளையும் கொடுத்தலை விட மேலான நல்லறமாகும். அது எல்லோரும் எளிதில் செய்யக்கூடிய அறமுமாகும். அன்பும் அறமும் பெருகி, வையத்தில் இன்ப வாழ்க்கை நிலவுமாறு நாட்டிலே நல்லெண்ணங்களைப் பரவச் செய்தல் "லோகோபகாரி" யின் தலைமையான நோக்கங்களில் ஒன்றாகும். நல்லெண்ணங்களையே செல்வமாகக் கொண்ட உயரிய நூல்கள் பல தமிழில் இருப்பினும், அவை அனைத்தும் செய்யுள் வடிவத்தில் அமைந்திருக்கின்றன. பண்டிதர், பாமரர் அனைவருக்கும் தற்காலத்தில் வசன நூல்களே பெரிதும் பயன்படக் கூடியன.

சுமார் ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகளுக்கு முன் ரோமாபுரிச் சக்ரவர்த்தியாக விளங்கிய மார்க்க அரேலியர் 'ஆத்ம சிந்தனை'யை முதன் முதலில் படித்த பொழுது, நான் இளமையில் படித்த நமது இராம கிருஷ்ண பரமஹம்ச தேவரின் உபதேச மொழிகள் எனது நினைவிற்கு வந்தன.

நமது தமிழ்நாட்டுத் தலைவர் சக்கரவர்த்தி இராஜ கோபாலாச்சாரியார் தேசத்தொண்டின் பயனாகச் சிறைக்கோட்டம் சென்ற காலங்களில் தமிழ்த்தொண்டு செய்யவும் அவருக்குத் தருணம் வாய்த்தது. கிரேக்க நாட்டு முனி புங்கவரான சோக்ரதர் சரித்திரம் முதலிய நூல்களை அவர் தமிழில் எழுதியதுடன், மார்க்க அரேலியர் ஆத்ம சிந்தனையையும் தமிழில் மொழி பெயர்த்துத் தமிழ் மக்களுக்கு வழங்கினார். சில ஆண்டுகளுக்கு முன் லோகோபகாரியில் வாரந்தோறும் வெளியான 'ஆத்ம சிந்தனை' இப்பொழுது புத்தக வடிவில் வெளியாகிறது.

மார்க்க அரேலியர் கருத்தைப் போலவே ஸ்ரீமான் ஆச்சாரியார் எழுத்தும் எல்லோருக்கும் விளங்கக்கூடிய எளிய நடையில் அமைந்திருக்கிறது. இந்த நூல் 'லோகோபகாரி' வெளியீடாக வருமாறு அன்புகூர்ந்து அநுமதி அளித்த ஸ்ரீமான் ஆச்சாரியாருக்கு எனது நன்றி உரியதாகும். இந்த நூல் விரைவில் வெளிவருமாறு பல வழிகளில் துணைபுரிந்த அன்பர்களுக்கும் எனது நன்றி உரியதாகும்.

எல்லோரும் இன்புற் றிருக்க நினைப்பதுவே
அல்லாமல் வேறொன் றறியேன் பராபரமே.

சென்னை,
13-12-1935.

பரலி—சு. நெல்லையப்பன்

# முன்னுரை

உலக முன்னேற்றத்திற்காக அவதரித்த மகாத்மாக்களில் ஒருவரான கிரேக்க முனிவர் ஸோக்ரதரின் சரித்திரத்தையும், உபதேசங்களையும் தமிழில் 1921-ம் ஆண்டில் சுருக்கமாக எழுதியது போல் அவரைப் போன்ற மற்ெறாரு சிறந்த ஞானியான ரோமாபுரிச் சக்ரவர்த்தி மார்க்க அரேலியருடைய "ஆத்ம சிந்தனை" யைச் சுருக்கமாகத் தமிழ் மக்களுக்குப் பயன்படும் முறையில் 1928-ம் ஆண்டில் எழுதினேன். அப்பொழுது இதை லோகோபகாரி ஆசிரியர் தன் பத்திரிகையில் தொடர்ச்சியாக வெளியிட்டார். தமிழ் நாட்டில் தெய்வபக்தியும், தேச பக்தியும், தருமகுணமும் வளர்ப்பதே தம் வாழ்வின் கடமையாகக் கொண்ட சில பெரியார்களுள் ஒருவரான ஸ்ரீ நெல்லையப்பர் முதலில் தன் பத்திரிகையில் வெளியான இந்த நூலை இப்போது புத்தக ரூபத்தில் அச்சிட்டு என் தொண்டுக்குப் புத்துயிர் அளிக்க முன்வந்தது நான் பெருமை அடையக்கூடிய விஷயம்.

மார்க்க அரேலியருடைய "சிந்தனை" யைப் பகவத் கீதைக்கு ஒரு சிறந்த வியாக்கியானமாகவே கருதலாம். அதி லுள்ள ஒவ்வொரு விஷயத்திற்கும் மேற்கோள்களாக கீதையிலிருந்து சுலோகங்கள் எடுத்துக் காட்டலாம். உடல்வேறு, ஆத்மா வேறு. சத்தியமே ஆத்மாவின் சந்தோஷம். உடலின் துன்பத்தைக்கண்டு மனம் தளரவேண் டாம், ஆத்மாவை எந்த நிகழ்ச்சியும் துன்புறுத்த முடியாதென்று ஸோக்ர தர் உபதேசித்தார். உலகம் முழுதும் ஓர் அமைப்பு. தனி உயிரின் சுகத்தை யும், துக்கத்தையும் விசுவரூபத்தில் அமைத்து விசால புத்தியுடன் நோக் கின் துவந்தங்கள் தீர்ந்து, சத்தியம் ஒளிபெற்று, சாந்தி உண்டாகும் என் பதை மார்க்கர் கண்டு எழுதியுள்ளார்.

> பல வகைப்பட்ட பூதங்களும் ஒரே ஆதார முடையன என்பதை அறிந்த வர் விஸ்தாரமான பிரமத்தை அடை கின்றார். (கீதை அ. 13, சு 31.)

என்னும் கீதாவாக்கியத்தின் பொருளை மார்க்க அரேலியர் நேரில் கிருஷ்ண பகவானிடம் உபதேசம் பெற்றது போல் விஸ்தாரமாக விளக்கி யிருக்கி

ஞர். மார்க்க அரேலியர் "சிந்தனை"யை அடிக்கடி வாசிப்பதினால் மக்கள் மன உறுதியும் சாந்தியும் அடைவார்களென்பதில் சந்தேகமில்லை. இப் புத்தகத்தைத் தமிழ் மக்கள் அனைவரும் ஆதரித்து ஸ்ரீ நெல்லையப்பரின் சிரமம் வீணாகாமற் செய்வார்களென்பது என் வணக்கமான வேண்டுகோள்.

காந்தி ஆசிரமம்,
திருச்செங்கோடு,
8—12—'35.

சக்கரவர்த்தி
இராஜகோபாலாச்சாரி.

## வரலாறு

ஜனக மகாராஜாவுக்குப் பின் உலகத்தில் புகழ்பெற்ற இராஜரிஷிகள் இருவராவர். ஒருவர் பாரத கண்டத்தை ஆண்ட அசோக மன்னர். மற்றொருவர் மேல்நாட்டில் உரோம ராஜ்யத்தை ஆண்ட மார்க்க அரேலிய சக்ரவர்த்தி. இவர் அசோகருக்குப் பின், சுமார் நானூறு வருஷங்களுக்குப் பிறகு கி. பி. 161 முதல் 180-ம் வருஷத்தில் தேக வியோகமாகும் வரை அரசு புரிந்தார்.

மார்க்கருடைய "ஆத்மசிந்தனை" பிறர் படிக்கவேண்டி எழுதிய ஒரு நூலல்ல. ஒரே காலத்தில் எழுதியதுமல்ல. அவ்வப்போது தனக்குள் தோன்றிய எண்ணங்களைத் தன் மனோ நிலையைத் திடப்படுத்திக் கொள்ளுமாறு தனக்குத் தானே உபதேசித்துக் கொண்ட முறையில் அவர் எழுதிய குறிப்புகள். அவைகளில் 'நீ' என்பது மார்க்கரே. ஆனால், அவர் தனக்காக எழுதிய இக்குறிப்புகளின் தொகை உலகத்தார் எக்காலமும் படிக்கத் தக்க சிறந்த வைராக்கிய நீதியாக விளங்கும் நூலாகும்.

விருப்பு, வெறுப்பு இரண்டையும் நீக்கிய உண்மைத் தவமும் ஒப்புரவறிந்து செய்தலாகிய இல்லறமுமே மார்க்க அரேலியருடைய உபதேசம். இன்பமும் துன்பமும் ஒருவன் சுதந்திரம். அவை உள்ளத்தின் நிலையேயன்றிப் புறப்பொருளில் இல்லை என்பதைப் பலவாறு அவர் வற்புறுத்துகிறார். உலகம் முழுதும் ஓர் உயிர் கொண்ட அமைப்பு; அதில் ஓர் அங்கமாவாய் நீ; அதன் நன்மையை நாடுவதே உன் இயற்கைத் தருமம்; ஆகவே ஒப்புரவறிந்து செய்தலே உன் கடமை; அதுவே உனது நலம்; நேர்வனவெல்லாம் தனியொருவனுக்குத் துன்பம் போலத் தோன்றினும் உலகத்தின் பொது நலனுக்காகவே நேரும்; ஆகையால், எது நேரினும் மனம் கலங்காமல் பொறுத்துக் கொள்ளக் கடவாய் என்று தன் மனத்தைத்தான் அடிக்கடி பலவேறு விதங்களில் உறுதிப்படுத்திக் கொள்கிறார். சாந்த சம நிலையே தெய்வபக்தி; அதுவே ஆனந்தம் என்பது மார்க்கர் கொள்கை. இந்நிலையை அடையச் சாதாரண மனிதனும் கூடத் தைரியமாக முயலுமாறு அவர் வழிகாட்டியிருக்கிறார்.

ச. இரா.

ரோமாபுரிச் சக்ரவர்த்தியும் ராஜரிஷியு மான

மார்க்க அரேலியர்

# ஆத்ம சிந்தனை

---

காலையில் எழுந்ததும் அடியிற் கண்ட படி உனக்குள் சிந்தித்துக் கொள்:—

*இன்று நான் கலகக்காரனைக் காண்பேன். நன்றி கெட்டவனைக் காண்பேன். மரியாதையற்றவன், மோசக்காரன், பொறாமைக்காரன் முதலிய எல்லோரையும் சந்திப்பேன். அவர்கள் குற்றங்களுக்கெல்லாம் காரணம், நன்மை தீமை அறியாத அவர்களுடைய அறியாமையேயாகும். ஆனால், நானோ, நன்மை தீமைகளை நன்கு அறிவேன். நன்மையே நலம் தருவதென்றும், தீமையே தீமை பயப்பதென்றும் நான் அறிந்திருக்கிறேன். என்பால் ஒருவன் தீங்கு செய்தால், அவன் எனது உறவினன் என்பது எனக்குத் தெரியும். உடல் உறவால் உடன் பிறந்தானல்லனாயினும், ஆன்ம நேய ஒருமைப்பாட்டால் அவன் எனக்கு உடன்பிறந்தவனே. அவன் எனக்கு என்ன தீங்கு செய்யமுடியும்? என்னைத் தவிர, யாரும் என்னைக் கெடுக்கமுடி*

யாது. தீங்கிழைப்பவர் எனது உறவினரே யாதலின், அவர்கள் மீது நான் கோபமோ, வெறுப்போ கொள்ளலாகாது.

உலகத்திலுள்ள நாம் எல்லோரும் வாழப் பிறந்திருக்கிறோம். உடலிலுள்ள கை கால்கள், கண்ணிதழ்கள், மேல்வரிசை, கீழ்வரிசைப் பற்கள் போல நாமும் ஒன்றுபட்டு உழைக்கவேண்டும். இக்கடமையை மறந்து ஒருவருக்கொருவர் மாறாக வேலை செய்வது இயற்கைக்கு முரணாகும். வெளியே காட்டாமல் ஒருவன்மீது உள்ளத்தில் கோபமாவது வெறுப்பாவது கொள்வதும் தீங்கிழைப்பதே யாகும்.

**2.** 'நான்' என்று சொல்லும் இவ்வுருவம் உண்மையில், தசை, மூச்சு, மனம் இவற்றின் கூட்டுறவே. ஆகையால், எக்கணமும், இப்பொழுதும்கூட இறக்கும் தருணமே என்று கருது. இவ்வூனுடலைப் பெரிதாகக் கருதாதே. ரத்தமும், எலும்பும் சேர்ந்ததே உடல். இவ்வுடலின் உயிர் வெறுங் காற்றே யாகும். இப்பொழுது இருந்த காற்று அடுத்த கணத்தில் இல்லை. அது மாறி மாறி உட்சென்று வெளியே வருகின்றது.

உடலும் உயிரும் தவிர்த்து மனமே மீதியாய் இருக்கிறது. சிந்தித்துப்பார். உனக்கு வயதாய்விட்டது. ஏன் இந்த மனம் அடிமைப்பட்டுக் கிடக்கவேண்டும்? இங்கும் அங்கும் அலை

கடல் துரும்புபோல் அலைந்து ஏன் அல்லற்பட வேண்டும்? உலகத்தில் உடன்பிறந்த மக்களைப் பற்றி ஒரு நினைவுமின்றி உனக்கு நேர்ந்த விதியைப்பற்றி ஏன் வருந்தவேண்டும்? வரப்போவதைப்பற்றி ஏன் கவலைப் படவேண்டும்?

**3.** உலகத்தின் நன்மைக்கே எல்லாம் நடக்கிறது. விதிவசத்தால் நடப்பதுங்கூட உலக அமைப்புக்கு வேண்டியதே யாகும். சகலமும் தெய்வாதீனமே. அவ னன்றி ஓர் அணுவும் அசையாது. * உலகத்திற்காக நடப்பது எதையும் உலகத்தின் ஒரு பாகமாகிய நீ துக்கமாக எண்ணக்கூடாது. உலக அமைப்பைக் காப்பதற்கு வேண்டியதும், உலக அமைப்பில் இயல்பாய் உண்டாவதுமான ஒரு நிகழ்ச்சியை, அந்த அமைப்பில் ஒரு சிறு பகுதியான நீ நன்மையென்றே கருதவேண்டும். உலகத்திலிருக்கும் எல்லாப் பொருள்களுக்கும் சதா காலம் உருவம் மாறி வருவதும் சிதைவுபடுவதும் இயல்பாகும். அப்படிச் சிதைவுபடுவதும் மாறுவதுமே உலகத்திற்கு உயிராகும். இந்த உண்மையை அறிந்து நீ சாந்தி அடையவேண்

---

* ஒவ்வொரு உயிரின் உள்ளத்திலும் ஈசன் நிற்கிறான். மாயையால் அவன் எல்லா உயிர்களையும சக்கரத்தில் ஏற்றிச் சுழற்றுவதுபோல் சுழற்றுகிறான்.

—கீதை அத். 18, சு. 61.

டும். இந்தத் தத்துவத்தைக் கொண்டு உன் வாழ்க்கையையும் நடத்தவேண்டும். உண்மையான ஞானத்தை அளியாத சாஸ்திரங்கள் பலவற்றை ஓதுவதை விடு. மரணத்தருவாயில் கற்றதும் கேட்டதும் திருப்தி யளியாது. தெய்வத்திற்கு உண்மையில் நன்றியுள்ளவனாய், சாந்த சிந்தையுடன் உயிர்விட வேண்டும்.

**4.** இவ்வாறு மனதை உறுதிப்படுத்தாமல் நீ எத்தனை நாட்கள் கழித்திருக்கிறாய்? எவ்வளவு காலத்தை வீணாக்கி யிருக்கிறாய்? நினைத்துப் பார். இனித் தாமதிக்கக் கூடாது. இப்போதாவது உண்மையை அறிந்து சாந்த நிலையை அடையவேண்டும். உன்னை ஒரு பாகமாகக்கொண்ட இந்த உலக அமைப்பு எத்தகையது? இந்த அமைப்பை நடத்தும் பராசக்தி எது? நீ அந்த சக்தியிலிருந்து பறந்ததோர் பொறி. உனக்குள்ள காலம் மிகக் குறுகியது. அதற்குள் உன் புத்தியை மூடிக் கொண்டிருக்கும் இருளை நீக்கிக் கொள்ளாவிடில் உனக்குள்ள ஆயுள் முடிந்தே போகும். போன சமயம் திரும்பி வராது.

**5.** எப்போதும் மறவாமல் நினைவில் வைக்கவேண்டியது இது: "உலகம் முழுவதும் ஒரு ஜீவ அமைப்பு. அதன் இயல்பு என்ன? அந்த உலக அமைப்பில் ஒரு பாகமாகிய

"நான்" என்பதன் இயல்பு என்ன? அதற்கும் இதற்கும் என்ன பரஸ்பர சம்பந்தம்? சமஸ்த ரூபத்திற்கும், "நான் என்னும் இந்தப் பகுதிக்குமுள்ள சம்பந்தத்தை அறியவேண்டும். அந்த சமஸ்த ரூபத்தின் இயல்புக்கு இசைந்தே அதன் பகுதியாகிய நானும் நடந்துகொள்ள வேண்டும். அந்த ஜீவ சம்பந்தத்திற்கும் இதற்கும் எதுவும் தடையாக இருக்கக்கூடாது."

6. எந்த நிமிஷத்தில் உயிர்நீங்கிப் போக வேண்டுமானாலும் அதற்குச் சித்தமாய் இருக்குமாறு எல்லா விஷயங்களிலும் உன் எண்ணமும் பேச்சும் செயலும் இருக்கவேண்டும் உயிர் நீங்கிப் போவதில் என்ன துன்பம்? * மனிதர்களை விட்டுத் தேவர்களுடன் வாழ்வதில் என்ன கஷ்டம்? மனிதர்கள் தீங்கிழைப்பார்கள். தேவர்கள் தீங்கிழைக்க மாட்டார்கள். தேவர்கள் இருப்பது உண்மையல்ல வென்றாலும், அல்லது அவர்கள் இவ்வுலகத்தை நடத்துவது பொய் என்றாலும், அப்போதும் தான் என்ன? தெய்வத்தால் நடத்தப்படாத உலகத்தில் உயிர் நீங்கிப்போவதில் துன்பம் என்ன?

* ஆத்மாவுக்கு இவ்வுடலில் எங்ஙனம் குழந்தைப் பிராயமும் இளமையும் மூப்பும் தோன்றுகின்றனவோ, அங்ஙனமே மற்றொரு சரீரப் பிறப்பும் தோன்றுகிறது. வீரன் அதைக் கண்டு கலங்கமாட்டான். —கீதை அ. 2, சு. 13.

ஆனால் உண்மை இதுவல்ல. உலகம் கடவுளால் தான் நடத்தப்படுகின்றது. மேலும் மனிதன் துன்பத்தில் அகப்பட்டுக் கொள்ளாமல் தன்னைத் தான் காப்பாற்றிக்கொள்ள அவனுக்குப் பூரண சுதந்திரமும் உபாயங்களும் கடவுள் கொடுத்திருக்கிறார். எது உண்மையில் தீங்காகுமோ, அதிலிருந்து தன்னைத் தான் காப்பாற்றிக்கொள்ள மனிதனுக்கு வழியுண்டு. எந்தத் தீங்குகளைத் தான் நீக்கிக்கொள்ள முடியாதோ அவை அவனுக்கு உண்மையான துன்பங்களே யல்ல. அவை உண்மையான துன்பங்களாய் இருந்தால், அவைகளினின்று தப்பவும் தெய்வம் மனிதனுக்கு வழிகாட்டி யிருக்கும். ஒரு மனிதனுடைய ஆத்மாவைக் கெடுக்கக் கூடாத ஒரு விஷயம் எப்படி அவனுக்குத் துன்பமாகும்? ஒருவனுடைய ஆத்மாவைப் பாதிக்காத எதையும் உண்மையில் தீங்கு என்று சொல்லமுடியாது. தெய்வம் அவைகளை அறியாமல், அல்லது அறிந்து நீக்கமுடியாமல், அல்லது அவைகளினின்று மனிதன் தன்னைக் காப்பாற்றிக் கொள்ளத் தகுந்த உபாயம் தேடிக்கொடுக்க முடியாமல் விட்டுவிடவில்லை.

உலகத்தில் நல்லவர்களுக்கும் தீயவர்களுக்கும் வேற்றுமையின்றித் தாறுமாறாய்ச் சுகமும் துக்கமும் உண்டாகின்றன. இவைகள் உண்

மையான சுகமும் துக்கமுமானல் இதைத்தடுக்க தெய்வத்தால் முடியவில்லையா? நல்லவர்களுக்குச் சுகமும், தீயவர்களுக்குத் துக்கமும் உண்டாகுமாறு செய்யமுடியாமல் தெய்வம் இப்படி விட்டுவிடவில்லை. உண்மையான தீமையும் இவைகளில் இல்லை. ஒவ்வொரு மனிதனுடைய சுகமும்—துக்கமும், நன்மையும்—தீமையும் அவனுடைய சுதந்திரத்தில் இருக்கின்றன.

உயிருடன் இருப்பதும்—இறப்பதும், மதிப்பும்—அவமதிப்பும், சுகமும்—துக்கமும், செல்வமும்—வறுமையும் மக்கள் குணத்திற்குத்தகுந்தபடி இராமல், தக்கவர்களுக்கும் தகாதவர்களுக்கும் நேர்கின்றன. ஆராய்ந்து பார்த்தால், இவைகளில் உண்மையான நன்மையும் கிடையாது; தீமையும் கிடையாது. அவைகளைக் கண்டு இவை நல்லவை; இவை தீயவை; இவை இன்பம்; இவை துன்பம் என்று கருதலாகாது.

**7.** நமக்குள் அறிவை உபயோகித்து நாம் சிந்திக்கவேண்டும். உலகத்திலுள்ள பொருள்கள் எல்லாம் எவ்வளவு சீக்கிரம் அழிந்து போகின்றன? மனிதனுடைய தேகமும் அழிந்து போகிறது. இறந்த பின், அவனைப் பற்றிய நினைவுகூடச் சில நாட்களுக்குப் பின் மறைந்து போகிறது. உலக விஷயங்களின்

உண்மை என்ன? சில நமக்குச் சுகம் தருவன போல் ஏமாற்றி நம்மை வலையில் இழுக்கும். சில கஷ்டம் தருவனபோல் பயமுறுத்தும். சில நம்முள் அகங்காரத்தை உண்டாக்கும். இவை எல்லாம் உண்மையில் எவ்வளவு அற்ப மானவை; பயனற்றவை; இழிவானவை; நிலை யற்றவை. புகழ் என்பது உண்மையில் என்ன? எப்பேர்ப்பட்டவர்களுடைய மதிப்பும் பேச்சும் கூடிப் புகழ் என்பது உண்டாகிறது? மரணம் என்றால் என்ன? அதை நன்கு ஆராய்ந்தால், அது பிரகிருதியின் ஒரு இயல்பே தவிர வேறொன்றுமில்லை என்பது புலப்படும். இயல் பாய் நடக்கும் ஒரு விஷயத்தைக்கண்டு குழந் தைகள் அஞ்சும். அறிந்தவர்கள் ஏன் அதைக் கண்டு மனம் கலங்கவேண்டும்? மனிதன் இறப் பது இயல்பு மாத்திர மல்ல. இறப்பதால் பிர கிருதியில் புத்துயிர்கள் கூட உண்டாவதற்கு வழி யாகும்.

அறிவாளியானவன் ஆராய்ந்து பார்க்க வேண்டியது இதுவே: "மனிதன் தெய்வத்தை எவ்விதம் அணுகுவான்? தன்னிலிருக்கும் எந்த அம்சம் தெய்வீகமானது? ஒரு மனிதன் எந்த நிலையில் இருக்கும்போது அவனுடைய தெய் வீக மான சுபாவம் மேலிட்டுத் தெய்வத்தை அணுகும்?"

8. உண்மையில் தன்னுடைய சுகத்திற்கு ஏதுவல்லாத பல விஷயங்களில் மனதைச் செலுத்தியும், அயலான் மனதிலுள்ள எண்ணங்களைப் தோண்டிப் பார்க்கக் கவலைகொண்டும் இருப்பவனுடைய நிலைமை வருந்தத்தக்க நிலைமையாகும். மனதைத் தனக்குள் செலுத்தி உள்ளே மறைந்து கிடக்கும் பரமாத்ம சொரூபத்தைக் கண்டு கொண்டு அதற்கு உண்மையான தொண்டு செய்வதில் சிந்தனையைச் செலுத்துவதே வழி யென்பதை அறியாமல் பல முயற்சிகளில் தலையிட்டுக் கவலைப்படுகிறான். தன்னுள் மறைந்து நிற்கும் ஆத்மாவுக்கு நன்மை செய்து கொள்ளுவது எப்படி யென்றால், காமமும், அவிவேகமும்,மனக்கலக்கமும் தன் உள்ளத்தில் சேராமல் காத்துக்கொள்வதே. விதியால் வந்த சுகமும், விலக்கமுடியாத துக்கமும், உலகத்தை நடத்தும் தெய்வம் கொடுத்த வரப்பிரசாத மென்று வணக்கத்துடன் ஏற்றுக்கொள்ள வேண்டும். மனிதர்கள் செய்த செயல்களை, அவை தனக்கு நன்மையே யாயினும், தீமையேயாயினும் உறவினர் செய்தது என்று விருப்பத்துடன் ஒப்புக்கொள்ள வேண்டும். எவனாவது ஒருவன் உனக்கு ஒரு தீங்கிழைத்தால், நன்மை தீமை என்னும் வித்தியாசத்தை அறியாத ஒருவன் செய்த செயல்

என்று அவன்பால் இரங்கவேண்டும். கண்தெரியாத குருடனுக்கு வெண்மை, கருமை என்பது தெரியாதல்லவா? அவனைக் கண்டு இரங்குவதைப்போல் நன்மை தீமை என்னும் வித்தியாசம் அறியாதவர்களைக் கண்டும் நாம் இரங்க வேண்டும்.

**9.** உலகம், அதிலுள்ள கோடிக்கணக்கான பிராணிகள், உயிரற்ற வஸ்துக்கள் இவை அனைத்தும் ஒன்றுக் கொன்று பரஸ்பர சம்பந்தத்துடன் அமைக்கப்பட்டுள்ள ஒரு அமைப்பாகும். இந்த உலகத்திலிருந்து ஒருவன் தன்னை வேறுபடுத்திக்கொண்டு வாழ்வது உடம்பில் ஒரு கொப்புளம் அல்லது பரு உண்டாவது போலாகும். சரீர சம்பந்தம் இருந்தும் அதன் அமைப்பில் சரியாய்ச் சேராமல் நோய் இழைப்பது கொப்புளம் அல்லது புண். ஒருவன் உலகத்திலுள்ள ஜீவராசிகளுடன் ஐக்கியப்படாமல் தன்னை வேறுபடுத்திக் கொள்வதும் ஆத்மத் துரோகமாகும். இந்த உலகத்தில் ஒரு பாகமாகிய எனக்கு நேரிடும் எந்த சம்பவத்தைக் குறித்தும் நான் வருத்தப்படக்கூடாது. வருத்தப்பட்டால் உலக அமைப்பில் சேருவதற்கு இணங்காமல் அதற்கு இடையூறு விளைவித்ததைப் போலாகும். உலகம் முழுவதும் அடங்கியுள்ள பராசக்திக்கு அது

துரோகமாகும். ஒருவனைத் துவேஷித்தாலும், அல்லது ஒருவன்மேல் கோபங்கொண்டு தீங்கு செய்ய நினைத்தாலும் அது உலகத்தினின்று வேறுபடும் குற்றமாகும். நேர்ந்த இன்பத்தினு லாவது, துன்பத்தினுலாவது மனநிலை கெட் டால் அதுவும் ஆத்மத் துரோகமாகும். கபடம், பொய், மோசம் இவை கலந்த பேச்சும், செய லும் ஆத்மத் துரோகமாகும். பயனில்லாத செய லும், சிந்தனையும், விவேகமற்று நடப்பதும் ஆத்மத் துரோகமாகும். எந்தச் சிறிய காரியத் தையும் பாரமார்த்திக எண்ணத்துடன் செய்ய வேண்டும். அரசன் கட்டளைகளுக்கும், அமைப் புக்கும் கீழ்ப்பட்டு நாம் நடப்பதுபோல் பகுத் தறிவு உள்ள ஒவ்வொருவனும் எல்லா ஆட்சி களுக்கும் மேலான ஆட்சியும் அமைப்புமான இந்த உலக அமைப்பின் தெய்வீக தருமத்தை அனுசரித்து நடந்து கொள்ளவேண்டும்.

**10.** மனிதனுடைய ஆயுள் மிகச் சுருங்கி யது. அவன் மனதைக் கவரும் விஷயங்களும் நிலையற்றவை. மனிதனுடைய உணர்ச்சியும் தெளிவற்றது. உடலும் அழிவுள்ள பொருள் களால் ஆக்கப்பட்டது. மனமும் நீர்மேல்குமிழி போன்றது. விதியும் அறியக்கூடாதது. புகழும் அறிந்தோர் ஆக்குவ நல்ல. சுருங்கச் சொல் லின், உடலுக்குச் சம்பந்தப்பட்டதெல்லாம்

நீரோட்டம். மனதுக்குச் சம்பந்தப்பட்டதெல்லாம் கனவு. ஆயுள் நாளெல்லாம் ஒரு பெரும் போர், அல்லது பரதேசியின் யாத்திரை. இறந்தபின் அடையும் புகழும் ஒரு பெரும் அந்தகாரம். ஆனல், இவற்றினிடையில் மனிதனுக்கு எது வழிகாட்டி யாகும்? ஞானம் ஒன்றே. இந்த ஞானம் எதுவென்ருல் ஒவ்வொருவன் உள்ளத்திலும் குடிகொண்டிருக்கும் தெய்வத் தன்மையுடைய ஆத்மாவுக்குத் தீங்கும்,நோயும் உண்டாகாமல் பாதுகாப்பதே. சுகத்திற்கும் துக்கத்திற்கும் மேலாக ஆத்மாவை நிறுத்திவைப்பதே ஞானமாகும். பயனில்லாச் செயல், மோசம், கபடம் இவைகளைச் செய்யாதிருத்தலே ஞானம். தனக்கு மற்றொருவன் இது செய்யவேண்டும், இது செய்யாமல் ஒழியவேண்டும் என்று எதிர்பாராதிருத்தலே ஞானம். எது நேரிட்டாலும் எந்தக் கடவுள் என்னைப் படைத்தாரோ அல்லது எந்தப் பிரகிருதி அமைப்பில் நான் ஒரு பாகமாய்ப் பிறந்தேனே, அந்தத் தெய்வம், அந்தப் பிரகிருதியே அதற்குக் காரணமென் றறிந்து, நேரும் சுகம், துக்கம் இரண்டையும் வருத்தமின்றி ஒப்புக் கொள்வதே ஞானம். முடிவில் சாந்த சித்தத்துடன் மரணத்தை எதிர்கொள்வதே ஞானமாகும். மரணம் என்ருல் என்ன? எந்த மூல

தாதுக்கள் சேர்ந்து உடல் உண்டாயிற்றோ, அந்தத் தாதுக்களாக மறுபடி உடல் பிரிந்து போவதே மரணம். இதைக்கண்டு ஏன் கலங்கவேண்டும்? நாம் யார்? சில பொருள் களின் சேர்க்கையினால் தானே நாம் உண்டா யிருக்கிறோம். அந்தப் பொருள்களுக்கு அழி வாவது குறைவாவது கிடையாது. அவை ஓயா மல் உருவம் மாறியும் அமைப்பு மாறியும் இருந்து கொண்டிருக்கும். அவைகளைப் பற்றிக் கவலையில்லை. அவ்வாறிருக்க, அந்தப் பொருள் களின் சேர்க்கையாகிய இந்த உடலின் மாறுத லைக் கண்டு ஏன் அஞ்சவேண்டும்? மரணம் பிரகிருதியின் இயல்பாகும். இயல்பான ஒரு விஷயம் எப்போதும் தீங்காகாது.

11. உன்னுடைய யாத்திரை முடிந்தது. திரும்பிப் போகும் தருணம் வந்தது. புறப்படு. மரணத்தைக் குறித்துப் பயப்படாதே. இந்த உயிரை விட்டு நீங்கி வேறு உலகம் சென்றால் அதுவும் தெய்வ ஆட்சிக்குள் அடங்கிய உலகந் தான். ஆகையால், ஏன் பயப்படவேண்டும்? "இறந்தபின் வேறு உலகம் கிடையாது; உயிர் கிடையாது; உணர்ச்சி கிடையாது" என்றாலும் அதைப்பற்றித் தான் என்ன கவலை? இன்பம், துன்பம் என்றும் இல்லாமல் இந்த உடலுக்காக எப்போதும் பாடுபடுவதை விட்டுச் சுகமாக

இருக்கலாமல்லவா? அழுகிப்போகும் இந்த ஈன சரீரத்திற்காக எந்நேரமும் நாம் தொண்டு செய்வதிலிருந்து விடுபடுவது நன்மையேயாகும்.

**12.** உனக்கு உள்ள காலம் மிகக் குறைவு. அதை வீணாக்கவேண்டாம். அயலாருடைய குற்றங்களைக் கணக்கிட்டுக்கொண்டு காலத்தை வீணாகக் கழிக்கவேண்டாம். அவன் என்ன செய்கிறான்? இவன் என்ன செய்கிறான்? அதை ஏன் அவன் செய்கிறான்? இவன் என்ன நினைக்கிறான்? அவன் உள்ளத்தில் என்ன எண்ணம், என்ன சூழ்ச்சி? இவை போன்ற கவலைகளைக் கொண்டு தத்தம் ஆத்ம க்ஷேமத்தை மறந்து விட்டு மற்றவர்களைக் குறித்தே அறிவையும் காலத்தையும் வீணாக்கி விடுகின்றோம். பயனில்லாமல் எதேச்சையாக மனம் செல்லுவதைத் தடுத்துக்கொள்ள வேண்டும். அதிலும் தீய எண்ணங்களை அறவே ஒழித்தல்வேண்டும். திடீரென்று ஒருவர், "நீ என்ன நினைத்துக்கொண்டிருக்கிறாய்?" என்று கேட்டால், உடனே தயங்காமல் உள்ளதை உள்ளபடியே, "இதை நினைத்தேன். இது என் மனதிலுள்ள எண்ணம்" என்று எளிதில் சொல்லக் கூடியவாறு உன் மனதைச் சுத்தப் படுத்திக் கொள்ளவேண்டும். பிறருக்குச் சொல்லத் தகாத எண்ணங்களை விட்டொழிக்க வேண்டும். நீ நினைக்கும் எண்ணங்க

ளெல்லாம் பிறருக்கு நன்மை பயக்கத் தக்கவை, தீங்கற்றவை, சுயநலங் கருதாதவைகளாய் இருக்கவேண்டும். கேவலம் காமஇன்பம், கலகம், துவேஷம், அவநம்பிக்கை ஆகிய எண்ணங்கள் மனதில் உதிக்காமல் பார்த்துக் கொள்ள வேண்டும்.

இப்படி மனதைப் பழக்கப்படுத்திக் கொண்டு நன்மையே நாடிவரும் மனிதன் கடவுளின் உண்மை அடியான் ஆவான். தனக்குள் குடியிருக்கும் தேவாம்சமான ஆத்மாவை எந்த இன்பமும் மாசுபடுத்தாமலும், எந்தத் துன்பமும் நோவுபடுத்தாமலும் அவன் காப்பாற்றிக் கொள்வான். பிறருடைய துவேஷம், அவமரியாதை, குற்றம் ஆகியவைகளால் தன் மனதைக் கலங்கச் செய்யவிடான். இவ்வாறு தன் உள்ளத்தை ஸ்திரப்படுத்திக்கொண்டு ஆத்மாவைத் துன்புறுத்தும் காமக் குரோதாதிகளுடன் போர்செய்து வெற்றியடைவான். நடுநிலை கொண்டவனுவான், சுகம்—துக்கம், நன்மை—தீமை, எது நேரிடினும் மனமகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொள்வான். உலகத்தின் நன்மைக்கு வேண்டினலன்றிப் பிறர்செயலும், சொல்லும், எண்ணமும் என்னவென்று கவலைப்படாமல் தன் கடமையைக் கருதி வாழ்வான். தன் செயலையும், சொல்லையும், எண்ணத்தையும் பிழை

யறக் காப்பான். உலக அமைப்பில் தனக்கு நேர்ந்த சுகம், துக்கம் இரண்டையும் சமமாகவே பாவிப்பான். அறிவுள்ள ஜீவகோடிகள் எல்லோரும் ஒரு குடும்பத்தைச் சேர்ந்த உறவினராவார்கள் என்பதை மறக்கமாட்டான். மற்றவர்கள் நலத்தை நாடுவதே மனிதனுடைய இயல்பான தருமம் என்று அறிவான். நல் வாழ்வு வாழ்பவர்களுடைய மதிப்பை மாத்திரம் கருதுவான். தரும வழியில் நில்லாத மற்றவர்களுடைய ஒப்புதலேயும், பாராட்டுதலேயும் நாட மாட்டான். அவர்களுடைய மதிப்பை ஒரு பொருளாகக் கருதாமல் தள்ளுவான். "தங்கள் வாழ்வு தங்களுக்கே பிடிக்கவில்லே. அத்தகையோருடைய நன்மதிப்பு எனக்கு என்னபயன்" என்று அதைப்பற்றிக் கவலேப்பட மாட்டான்.

**13.** மன மொவ்வாத செயலேச் செய்யாதே. சமூக நன்மைக்கு மாறுபாடாகவாவது, விவேகக் குறைவாகவாவது, மனப்புகைச்சலுடனுவது நடந்துகொள்ள வேண்டாம். பேச்சுத் திறமையினுல் உண்மையைமறைக்கவேண்டாம். வீண்பேச்சுப் பேசவேண்டாம். பிறர் காரியத்தில் பயனின்றித் தலேயிடவேண்டாம். உனக்குள் தெய்வீகமான ஆத்மசக்தி யுண்டு. அதைக் கண்டு வீரியம், தைரியம், மரியாதை, பரோபகாரம் உடையவனுக வாழ்வாய். எந்த நிமிஷத்

தில் வேண்டினும் குறி கண்டவுடன் உயிரைக் கொடுக்கத் தயாராக இருக்கும் போர்வீரனைப் போல் மரணத்திற்குச் சித்தமாக இரு. சாக்ஷி யாவது ஆணைச்சொல்லாவது வேண்டாத சக்தி யவானாய் இரு. பிறருடைய ஆதரவை எதிர் பாராமல் சுதந்திரமாய் வாழ்வாய். பிறருடைய ஆறுதலை வேண்டாமல் உள்ளத்தில் சாந் தத்தை அமைத்துக்கொள்வாய். பிறர் மேல் சாராது நிற்பதே உண்மைச் சுதந்திரம்.

**14.** மனிதனுக்கு உலகத்தில் நன்மை எது? யோசித்துப் பார். நீதி, சத்தியம், தெளி வான புத்தி, தைரியம் இவைகளைவிட வேறு எது சுகம் தரும்? அவனவன் உள்ளத்தை அவனவன் சுத்தமாய் வைத்துக் கொண்டு அறி வுள்ளவனாக நடந்துகொள்வது ஒவ்வொருவனுக் கும் உள்ள சுதந்திரம். தன் செயலுக்கு மீறி யது விதி. அதை ஒருவன் தடுக்கவாவது மாற்ற வாவது முடியாது. ஆனால், ஒருவனுக்கு நேர்ந் தது நல்லதே யாயினும், தீயதேயாயினும் இரண்டையும் சமமாகக் கொள்ள அவனவன் மனமே காரணம். இவ்விதம் மனிதன் தன் மனதை நிறுத்திக்கொள்ளும் வகையினால் எவ் விதத்திலும் சுகம் அடையலாம். * இதைத்

* இந்திரியங்கள் சலிக்கும்போது ஒருவனுடைய மன மும் அவற்றைப் பின்பற்றிச் செல்லுமாயின் அம் மனம் கட லில் தோணியைக் காற்று மோதுவது போல அறிவை மோதுகிறது. —கீதை அ. 2, சு. 67.

தவிர்த்து வேறு சிறந்த வழி உண்டென்று உனக்குத் தோன்றினல், உண்மையில் அதனைப் பின்பற்றிப் போவதில் தடையில்லை. ஆனல், மனிதனுக்குள் இருக்கும் தெய்வீக தத்துவமே எல்லாவற்றிலும் உயர்ந்தது. அதைக்கொண்டு மனதை அடக்கி, எண்ணங்களைக் காத்து, புலன்களால் இழுக்கப்படாமல் விலகி நின்று, தெய்வத்திற் கடங்கி உலகத்தின் நன்மையை நாடி நடப்பதே சிறந்தது. மற்றது எல்லாம் அற்பம், விரும்பத் தகுந்ததல்லவென்று நீ கண்டுகொள்வாயானல், பிறகு எதைச் சிறந்ததென்று அறிந்தாயோ, அதையே உறுதியாகக் கடைப்பிடித்து மற்றவைகளில் மனம் போகவிடாதே. மேலான நன்மை பயக்காது என்று கண்டுகொண்ட விஷயங்களில் உன் மனம் செல்ல ஒரு சமயம் விட்டுவிட்டாயானல் பிறகு அதைத் தடுப்பது அரிது. எது கைகண்ட மருந்தோ அதை அடையமுடியாமல் போகும். உலக நன்மையும் மேலான அறிவுக் கிசைந்ததுமான ஒரு பொருள் இருக்க அதை விட்டுவிட்டுப் பொன்னும், மண்ணும், புகழும், போகமும் தேடிப்போவது மூடத்தனமாகும்.

ஒரு வேளை நினைக்கலாம்: "இச்சுக போகங்களை நாடினலும் அதன் கூடவே உண்மைப்

பொருளான ஆத்ம நிலையையும் காப்பாற்றிக் கொள்ளலாம். சிற்றின்ப வேட்டை என் மனதை முழுதும் கவரவில்லை. ஆசைகளை அதிகரிக்கவிடாமல் அடக்கி நடத்தலாம்" என்று நீ நினைக்கலாம். இது மோசம் போகும் வழியாகும். சில காலம் உனக்கு அடங்கினாற்போலத்தான் இவை யிருக்கும். பிறகு நிச்சயமாய் உன்னை முழுதும் கவிழ்த்துத் தள்ளிவிடும். இடங் கொடுத்தபின் அவைகளைப் பின்னால் எதிர்க்கமுடியாது. மற்ற எண்ணங்களுக்கு இடங் கொடுக்காமல் மனதைச் சுத்தமாயும் சுதந்திரமாயும் அமைத்துக்கொண்டு எது உறுதிப்பொருள் என்று கண்டாயோ அதையே பின்பற்று. அதுதான் சாதனம்.

"இன்பம் தருவதை ஏன் விலக்கவேண்டும்? என்று சிலர் வாதிப்பார்கள். ஆனால், ஆராயவேண்டிய இன்பம் என்பது யாது? கேவலம் மிருகப் பிராயமான சுகம் சுகமல்ல. மனிதன் அறிவுள்ள ஜன்மம் எடுத்திருக்கிறான். அந்த அறிவுக்கு இசைந்த உயர்வான இன்பந்தான் உண்மையான இன்பம். மிருகத்துக்குச் சமமான உடலுக்கு மாத்திரம் இன்பம் தருவதை ஒரு பொருளாக மதிக்க வேண்டாம். இப்படி உன் அறிவை உபயோகித்து மதிக்கத் தகாததை உறுதியுடன் விலக்கு. ஆனால், அப்

படி விலக்கு வதிலும் கர்வம் கொள்ளாமல் அடக்கத்துடன் நடந்துகொள்.

**15.** எதிலும் ஆராய்ந்து பார்த்து ஒரு முடிவுக்கு வரும் விவேகம் உனக்கு உண்டு. இந்த விவேகத்தைப்பய பக்தியுடன்உபயோகிக் கக் கடவாய். இதுவே மனிதனைக் காக்கும் பெருந்துணை. இயற்கைத் தருமத்திற்கும் மனித சொரூபத்திற்கும் மாறுபட்ட எண்ணங்கள் மனதில் மறுபடியும் தோன்றாதவாறு தள்ளிக் காப்பது இந்த விவேகமே. இதற்கு விஷயங் களை நிதானித்து ஆராயவேண்டும். நல்ல ஜனங்களோடு அன்புடன் நெருங்கிப் பழக வேண்டும். தெய்வம் நம்மிடம் அன்பு கொள்ளு மாறு வாழவேண்டும்.

**16.** உன் வாழ்வில் இடையே எது நேர்ந்தாலும் அதை உள்ளது உள்ளபடி கிரம மாய் ஆராயுந் தன்மையை நீ அடையவேண் டும். அதுவே பெருந்தன்மையை உண்டாக் கும். எதைக் கண்டாலும் இதனல் உலகத் திற்கு என்ன பயன்? உலக அமைப்பில் இதற்கு என்ன ஸ்தானம்? மனிதனுக்கு இத ஞல் நன்மை தீமை என்ன என்பதை ஆராய வேண்டும். பிரபஞ்சம் முழுதும் ஒரு பெரிய ராஜ்ஜியம். உலகத்திலுள்ள பல தேசங்களும் ஆட்சிகளும் அதனுள் அடங்கிய சிறு குடும்பங்

களைப் போன்றன வென்பதை நீ நினைவில் வைக்கவேண்டும்.

"என்முன் தோன்றும் இப்பொருள் எத் தகையது? எப்பொருள்கள் சேர்ந்து இது உண்டாயிருக்கிறது? இது எவ்வளவு காலம் இருக்கும் இயல்புள்ளது? இதனால் என் உள் ளத்தில் நற்குணங்கள் உண்டாகின்றனவா? பொறுமை, தைரியம், சத்தியம், நம்பிக்கை, சுவாதந்திரியம் முதலிய குணங்கள் இதனால் உண்டாகின்றனவா?" என்று இவ்வாறு ஆராயவேண்டும்.

எது நேர்ந்தாலும் நீ சிந்தித்துக்கொள்ள வேண்டும். "இது ஆண்டவன் செயல். இது நெய்யும் வஸ்திரத்தில் ஊடும், பாவும் போல் உலகவாழ்வின் இயல்பில் நெய்யப்பட்ட ஒரு சம்பவம். இதை ஏன் நான் துக்கமாகப் பாவிக்க வேண்டும்?"

"எவனாவது தீங்கு செய்தானேயாகில், இவன் என் குலத்தைச் சேர்ந்தவன்; என் உற வினன்; என் தோழன்; அறிவில்லாதவன். தன் இயல்புக்கு இசைய இவன் நடந்துகொண் டிருக்கிறான். நானோ அறியாதவ னல்ல. ஒன்று பட்டு வாழவேண்டிய சமூக தருமத்தை நான் மறக்கக்கூடாது; நீதியுடன் கருணையுடனும் நான் நடந்துகொள்ளவேண்டும். உண்மையில்,

இன்பமும் துன்பமுமற்ற பொருள்களை நான் அதனதன் பயனை உள்ளபடி அறிந்து அவைகளை மதிக்கவேண்டும்" என்று இவ்வாறு சிந்திக்க வேண்டும்.

**17.** சுகத்திற்கு வழி இதுவே: "நடந்து போனதைப் பற்றிய துயரமும், வரப்போவதைப் பற்றிய கவலையும் விட்டு, நிகழும் காரியங்களில் மனம், திடபுத்தி, தயை இவைகளை அறிவுடன் செலுத்தி வாழ்வை நடத்து. உன் ஆத்மாவைப் பரிசுத்தமாகவும், மனம் கோணாமலும், எப்போது வேண்டினும் உடலிலிருந்து உயிர் வேறுபட்டு மாசற்றுச் செல்லத் தயாராக அமைத்துக்கொள். ஒன்றை அடையப் போகிறேன் என்று எதிர்பாராமலும், ஒன்றிலிருந்து தப்பிப் பிழைக்க வேண்டுமென்னும் எண்ணம் இல்லாமலும் இயற்கை வாழ்வு நடத்து. உன் பேச்சுகளில் தைரியமும், சத்தியமும் பொருந்தி யிருக்கவேண்டும். அப்போது தான் சுகமாக இருப்பாய். உன் மகிழ்ச்சிக்கும் எதனாலும் குறைவு நேராது."

**18.** சஸ்திர வைத்தியன் எப்போதும் தனக்கு வேண்டிய கருவிகளை வேண்டிய நிமிஷத்தில் உபயோகிக்க எல்லாவற்றையும் சித்தமாக வைத்திருப்பதுபோல் நீயும், தெய்வாதீன சம்பவங்களும், மனிதர்களுடைய செயல்

களும் உன்னைத் தாக்கியவுடன் அவைகளால் உனக்கு மனவேதனை உண்டாகாமல் அவைகளைச் சரிவர ஆராய்ந்து நடந்துகொள்ள உனக்குத் துணையாகப் பேருண்மைகளை உன் உள்ளத்தில் தயாராகவைத்துக் கொள்ள வேண்டும். அப்படிச் செய்வாயானால் எந்தச் சிறிய காரியத்திலும் உலகத்தில் மற்றவர்களுக்கும் உனக்குமுள்ள அழியாத தரும பந்தத்தை மறவாமல் நடந்துகொள்வாய். பரம்பொருளைக் கருதாமல் உலக வாழ்வைச் சரிவர நடத்தமுடியாது. உலகத்தின் இயற்கை அமைப்பை மறந்துவிட்டுப் பாரமார்த்திக தருமத்தை நடத்தவும் முடியாது. இரண்டும் வேறு வேறன்று.

**19.** இயற்கையோடு இசைந்த வாழ்வை ஒருவன் வாழ்ந்தால் என்னநேரிடும்? அதற்குத் தக்கவாறு நடந்துகொள்ள அவனுக்கு ஆற்றல் உண்டாகிறது. எந்தச்சம்பவம் நேரிடினும் எளிதில் அதைத் தாங்குவதற்கு மனந் தடுமாருமல் கால தேச வர்த்தமானங்களுக் கேற்றவாறு வாழ்வை நடத்துவதும் அத்தகையோனுக்கு எளிதாகும்; அவனுக்கு இப்பொருள் வேண்டும். அப்பொருள் வேண்டுமென்பது கிடையாது. எந்தப் பொருள் இருப்பினும், இல்லாவிடினும் சாந்தத்தை அடைய அவனுக்குத் தன் சாத

னத்தால் ஆற்றல் உண்டாகும். சந்தர்ப்பத்திற்குத் தக்கவாறு வளைந்து நிற்கும் தன்மையை அவன் மனம் அடையும். என்ன இடையூறு நேர்ந்தாலும் அதையும் தன் ஆத்மசக்தியின் வளர்ச்சிக்கு ஒரு துணையாகவே கொள்ளுவான். நல்ல தீயின்மேல் போட்ட பொருள்கள் அதை அணைக்காது; அவைகளே அத் தீயினுக்கு உடனே இரையாகிச் சுவாலையை இன்னும் வளர்க்கும். சிறிய சுடரை அணைப்பது போல அப் பொருள்கள் பெரிய சுவாலையை அணைக்க முடியாது. கொழுந்துவிட் டெரியும் தீயினைப் போல உன் மனத்தைத் தயாராக வைத்துக் கொள்.

**20.** தனிமையை நாடிச் சிலர் தனியாய் ஆசிரமம் கட்டிக் கொள்கிறார்கள். சிலர் கடற்கரைக்குப் போகிறார்கள். மலைகளிலும், காடுகளிலும் ஜன சஞ்சார மில்லாத இடங்களிலும் இருக்க விரும்புகிறார்கள். நீயும் அப்படியே தனியாய் இருக்க விரும்புகிறாய். இது அறியாமையினும் அறியாமை. எந்த வேளையில் வேண்டினாலும் நீ இருந்த இடத்திலேயே நல்ல தனிமையை அடையலாம். அமைதியும் உலகக் குழப்பமற்றதுமான தனியிடம் வேண்டுமானால் ஒருவன் தன் உள்ளத்திலே அதைக் காண வேண்டும். அதைப் போன்ற ஏகாந்தம்

வெளியே எங்கும் கிடையாது. அதிலும்ஒருவன் தன் உள்ளத்தில் சாந்த சித்தத்தைத் தரும் எண்ணங்களை முன்னரே சேர்த்து வைத்திருந் தானே யாகில், வேண்டியபோது ஆறுதலும் அமைதியும் எளிதில் தன் உள்ளத்திலேயே அடைவான். ஆகையால், உன் உள்ளமாகிய நல்ல வன மாளிகையில் அடிக்கடி தங்கிவா. அதனல் மன வலிமையை அடைவாய்.

இப்படி உன் உள்ளத்தோடு தனியே யிருந்து சிந்திக்குங் காலத்தில் பல விஷயங்க ளில் மனதைச் செலுத்தாமல் மூலாதார உண் மைகளை மட்டும் சிந்திப்பாயாக. உன் உள்ளத் தில் அந்த உண்மைகள் தங்கி நினைவில் அடிக் கடி வரும். பிறகு, உலகத்தில் நீ மறுபடியும் கலந்து வாழும்போது வருத்தம் உண்டாகும் விஷயங்கள் நேர்ந்தால் அவை உன் மன நிலை யைக் காக்கும்.

நீ ஏன் வருத்தப்படவேண்டும்? தீயோர் செயலைக் கண்டு வருந்துகிறாயா? அப்படி வருந்தும்போது சிந்திப்பாயாக: "அறிவுள்ள பிராணிகள் பிறந்திருப்பது ஒருவரோடொருவர் ஒத்துவாழவே. ஒருவர் செய்த குற்றத்தை மற் ெருருவர் பொறுப்பது தான் கடமை. எவனும் தீயவழியில் இறங்கும்போது மனம் ஒவ்வாமல் தான் இறங்குகிறுன். இதற்கு முன் எத்தனை

கோடிப்பேர்கள் ஒருவரை ஒருவர் பகைத்தும் வெறுத்தும், போராடியும் பிறகு இறந்து சாம்பலாய்ப் போயிருக்கின்றனர்? இவ்வாறு சிந்தித்து நீ அமைதி யடைவாய்.

ஒருவேளை உன் அதிர்ஷ்டத்தைக் கண்டு வருந்துகிறாயா? அப்போதும் நீ யோசிப்பாயாக: இந்த உலகம் தெய்வத்திற்குக் கீழ்ப்பட்டதா? அல்லது அணுக்களின் சுதந்திரச் சேஷ்டையா? உலகம் தற்செயலல்ல. அது ஒரு ஒழுங்குக்கு உட்பட்டு நடந்து வருகிறது; என்பதற்கு அளவற்ற காரணங்கள் இருக்கின்றன.

ஒரு வேளை உன் உடலை நோய் வருத்துகிறதா? உடல் வேறு, மனம் வேறு. உடலின் நோய் மனத்தை வருத்தாமல் காக்கமுடியும். தன் வலிமையை அறிந்த மனம் உடலின் நோயை ஒரு பொருட்டாகக் கருதாது. இன்பம், துன்பம் எதுவென்று நீ கண்டிருக்கிறாயா? உடலின் நோயைப் பற்றி வருந்தவேண்டாம்.

ஒரு வேளை நீ அற்பப் புகழைப் பற்றிக் கவலை கொண்டு வருந்துகிறாயோ? உலகத்தில் எவ்வளவு விரைவில் எல்லாம் அழிந்து விடுகிறது பார். கழிந்து போன யுகங்கள் கணக்கற்றவை. வருங் காலத்திற்கும் கணக்கில்லை. இவைகளில் உன் புகழ் எம்மாத்திரம்? புகழுந் தான் என்ன? பொருளில்லாத ஆரவாரமே யல்லவா?

ஜனங்களுக்கு நிலையான அபிப்பிராயம் கிடையாது. அறிவில்லாதவர்களுடைய பேச்செல்லாம் சேர்ந்தல்லவோ உண்டாகிறது புகழ்? அவ்விதப் புகழை அடைந்தாலும் அது எம்மட்டில் பரவும்? பிரபஞ்சத்தில் இப்பூமண்டலம் ஒரு சிறு அணு மாத்திரம். இப்பூமண்டலத்தில் நாம் இருக்கும் மூலை எவ்வளவு சிறியது? அதிலும் எத்தனை பேர்? எத்தகையோர் உன்னைப் போற்றுவார்கள் ?

இனியும் ஏதாவது சந்தேகமிருந்தால் ஆத்மசிந்தனை செய்த காலத்தில் நீ கண்ட உண்மைகளை நினைத்துக்கொள். சஞ்சலப் படாதே. வீண் சிந்தனை வேண்டாம். சுதந்திரனாக இரு. எந்த விஷயத்தைச் சிந்திக்கும் போதும் நீ உலகத்தில் ஒருவன் என்பதையும், மானுட குடும்பத்தில் ஒருவன் என்பதையும், ஒரு நாளில் நீ இறந்துபோவாய் என்பதையும் நினைவில் வைத்துக் கொண்டு எந்த விஷயத்தையும் சிந்திப்பாயாக. இரண்டு பெரிய உண்மைகளை எப்போதும் உன் உள்ளத்தில் உறுதியாக அமைத்துக் கொள். அவை எப்போதும் உனக்குப் பயன் படும். ஒன்று: உன் ஆத்மாவை இன்பதுன்பங்கள் தீண்டா. அவை வெளிப்புறமாகத் தனித்துக் கிடக்கும். சஞ்சலத்திற்குக் காரணம் உன் உள்ளத்திலேயே முளைப்பது தான். மற்

ஞென்று: உனக்குப் புலப்படும் சகல உருவங்க ளும் முடிவில் அழிந்து போகவேண்டியவை. நீ பார்த்த அளவிலேயே எத்தனை அழிவைக் கண்டிருக்கிருய்? அதை அடிக்கடி நினைத்துப் பார். மாறுவதே உலகத்தின் இயல்பு. மனிதன் எண்ணங்களே அவன் வாழ்வு.

**21.** மனிதனுய்ப் பிறந்த ஒவ்வொருவ னுக்கும் பொதுவாய் அறிவு என்பது உண்டு. அதிலிருந்து ஒவ்வொருவனுக்கும் ஓரளவு அறிவு என்பது உண்டாகிறது. இதனுல் இது செய்யத் தகுந்தது, இது செய்யத் தகாதது என்ற பகுத் தறிவு எல்லாருக்கும் பொதுவாகிறது. இதனுல் தருமம் அனைவருக்கும் ஒன்ருகிறது. மக்கள் அனைவருக்கும் தருமம் ஒன்ருதலின், அனை வரும் ஒரு ஆட்சிக்கு உட்பட்டவர்களே யாவார் கள். எனவே, உலகம் முழுவதும் ஒரு அமைப்பு, ஒரு வரையறைக்குள் அடங்கிய தாகும்.

இந்தப் பிரகிருதியிலிருந்து தான் என் உடலிலிருக்கும் ஒவ்வொரு பகுதியும் உண்டா னது. எப்பொருளும் உள்ள பொருளினின்றே உண்டாகவேண்டும். என் உடல் நிலத்திலிருந்து ஒரு பாகமும், நீரிலிருந்து ஒரு பாகமும், தீயிலி ருந்து ஒரு பாகமும் உருவம் மாறி உண்டா னது தான். அவ்விதமே அறிவு உருவமான

என் உள்ளமும் ஒரு மூல காரணத்திலிருந்தே உண்டாயிருக்க வேண்டும். இப் பகுதிகளெல்லாம் மறுபடி தத்தம் காரணங்களுடன் ஒன்றுபட்டுப் போவதே மரணம். எப்பொருளும் மாறுமே யன்றி, முற்றிலும் அழிந்துபோகாது.

**22.** பிறப்பைப் போலவே இறப்பும் இயற்கை ரகசியம். பூதங்களின் சேர்க்கை பிறப்பாகும்; பிரிவு மரணமாகும். இதைப் பற்றிக் கவலைப்பட வேண்டியதில்லை. பிறப்பின் இயல்பே இறப்பும். *

**23.** ஒரு துன்பம் நேரிடின் அதைப் பற்றி எண்ணுவதை விடு. எண்ணுவதை விட்டால் துன்பம் நேரிட்ட நினைவு போகும். அந் நினைவு நீங்கிய பின் துன்பம் எங்கே?

**24.** என்னுடைய உள்ளத்தைப் பழுதுபடுத்தாத எதுவும் என்னுடைய வாழ்வுக்குத் தீங்கிழைக்காது. ஆகையால், அது என்னை எவ்விதத்திலும் துன்புறுத்த முடியாது?

**25.** உனக்கு ஒருவன் தீங்கு செய்தானுல், நீ அவனுடைய தீய எண்ணங்களை உன் மனதில் கொள்ளாமல் இருக்கவேண்டும். உன்

* பிறந்தபின் இறப்பது உறுதியெனில், இறந்தவன் பிறப்பது உறுதியெனில் இந்த விலக்கொணு நிகழ்ச்சிக்கு நீ வருந்துதல் தகுதியன்று. கீதை அ. 2, சு. 27.

மனதில் என்ன எண்ணம் உண்டாக்க அவன் விரும்புகிறானோ, அதற்கு நீ இடங்கொடாதே. அப்போது அவன் செய்த தீங்கு உன் உள்ளத்தைப் பழுதுபடுத்தாது. பொருள்களை உள்ளது உள்ளபடி மனக் கலக்கமின்றி ஆராய்வாயாக.

**26**. தங்கள் தங்கள் சுபாவம் போல் தான் மனிதர்கள் நடந்து கொள்வார்கள். அத்தி மரத்தில் அத்திக்காய் காயாமல் ஆலங்காய் காய்க்குமா? இவ் வாயுள் எத்தனை நாள் இருக்கப்போகிறது? சீக்கிரத்தில் அனைவரும் மாண்டுபோய் எல்லாம் பொய்யாகும். இரண்டு குணங்களை நீ பெறவேண்டும், ஒன்று: மக்கள் நன்மையைக் கருதி எதைச் செய்யவேண்டுமென்று அறிவும், விவேகமும் உன் உள்ளத்தில் குறிக்கின்றனவோ அதையே செய். மற்றொன்று: நீ எண்ணின எண்ணம் தவறென்று ஒருவன் எடுத்துக்காட்டினால் உன் எண்ணத்தை விட்டுவிடு. ஆனால், நியாயம், பொது நலம், அல்லது வேறு தகுந்த காரணத்தைச் சரிவர மனதில் விசாரித்துத் தான் எண்ணத்தை மாற்ற வேண்டுமேயொழிய, விருப்பத்திற்கேற்றவாறு அல்லது ஜனங்கள் பாராட்டுவார்கள் என்று மாற்றக்கூடாது.

**27**. எந்தப் பிரகிருதியிலிருந்து அதன் ஒரு பாகமாக நீ உண்டானாயோ, அதனுள்

ஒன்றுபட்டு நீ மறைந்து போவாய். உன்னைப் பெற்றெடுத்த பொருளுடன் மறுபடி நீ சேர்ந்து விடுவாய். அதனாலென்ன? காரணத்தில் காரியம் உரு மாறி மறுபடி ஒன்றாகச் சேர்ந்து விடுவது தான் இறத்தல். இதைப்பற்றித் துக்கமேன்?

**28.** பதினாயிரம் ஆண்டுகள் வாழ்ந்திருக்கப் போவதாகக் கருதி வாழ்க்கையை நடத்த வேண்டாம். மரணம் நிச்சயம். இன்றோ, நாளையோ, அது எப்போதும் வரக் காத்திருக்கிறது. உயிருள்ளபோதே நல்லவனாய் இரு.

**29.** ஒரு பொருளுக்கு அழகு உண்டாயின் அவ்வழகு அதனுள்ளே அமைந்திருக்கிறது. பிறர் போற்றுவதனால் அது உண்டாவதல்ல. பிறர் கண்டு வியப்பதால் அதன் அழகு அதிகமாவது மில்லை, குறைவது மில்லை. புலனுக்குத் தோற்றமாகும் பொருள்களின் வெளி அழகே இவ்வித மிருக்க, பேரழகு கொண்ட உண்மைப் பொருளாகிய தருமம், நீதி, சத்தியம், அன்பு அடக்கம் இவைகளுக்குப் பிறருடைய புகழ்ச்சிவேண்டியதில்லை. இந்த நற்குணங்களில் ஏதாவது பிறர் புகழ்வதால் அழகாகுமா? பிறர் குறை கூறுவதால் பழுது படுமா? அழகிய மரகத மணியை ஒருவன் புகழாமல் போனால் அதன் அழகு குறைந்து விடுமா? தங்கம், தந்தம், பட்டு அல்லது யாழ், வாள், புஷ்பம்,

செடி முதலியவைகளில் இப்படித்தானே அதனதன் அழகு அதனத னுள்ளேயே அமைந்திருக்கிறது.

**30.** ஏ பிரபஞ்சமே! உனக்கு எது இசைந்ததோ, அதுவே எனக்கும் இசைந்தது. உனக்கு எது சமயமோ, அதுவே எனக்கும் தகுந்த சமயம். அகால மல்ல, காலந்தவறி வந்தது மல்ல. பிரகிருதியே! உன்னுடைய பருவ காலங்களில் உண்டானவை யெல்லாம் எனக்கு நல்ல பக்குவமான பலனே யாகும். உன்னிடமிருந்தே எல்லாம் உண்டாகிறது. எல்லாவற்றையும் நீயே தாங்குகிறாய். எல்லாம் மறுபடியும் உன்னையே அடையும். நீயே ஆண்டவனுடைய அழகிய அரண்மனை.

**31.** இந்த உலகம் ஆண்டவனால் ஒழுங்காய் அமைக்கப்பட்டதே யாயினும் சரி, அணுக்கள் தற்செயலாய்க் கலந்து உண்டானதே யாயினும் சரி, எவ்விதத்திலும் ஒழுங்குபட்டு அமைந்து நிற்கிறது. ஒன்றிலிருந் தொன்று வெகு தூரத்தில் சிதறி வெவ்வேறாகக் கிடக்கும் அண்டங்களும், அணுக்களும் ஒன்றையொன்று பற்றிக்கொண்டு ஒத்துணர்ச்சியுடன் இருக்கின்றன. இவ்வளவு ஒழுங்குடன் நிற்கும் இந்த ஜகத்தை ஆளும் சர்வேசுவரன் ஒழுங்கின்றி இருப்பானா?

**32.** உன் உள்ளத்தில் எவ்வளவு கெட்ட எண்ணங்கள் நிறைந்திருக்கின்றன? எவ்வளவு அச்சம்? எவ்வளவு இரக்க மின்மை? மிருகத் தனம், சோம்பல், இச்சகம் பேசுதல், லோபித் தனம், கொடுமை?

**33.** வேறு தேசத்திலிருந்து வந்த அன்னியன் ஒருவனுக்கு ஊரிலிருக்கும் விஷயங்கள் தெரியாது. அவ்வாறே, உலகத்தில் நடக்கும் சம்பவங்களின் பொருளை அறிந்துஒப்புக்கொள்ளாதவன்உலகத்திற்குஅன்னியனாவான். ஜனங்களை ஒன்ருகக் கட்டுப்படுத்தி அமைத்து வரும் சமூக தருமத்தை ஒத்து நடவாமல், வேறுபடுகிறவன் பரதேசி யாவான். அறிவு என்னும் கண்ணை மூடிக்கொள்கிறவன் குருடனாவான். சுகம் தரும் சுவாதந்திரியத்தை விட்டுப் பிறரை எதிர்பார்க்கிறவன் யாசகனே யாவான். நாம் எதிலிருந்து உண்டானேமோ, அதிலிருந்தே சகல சம்பவங்களும் உண்டாகின்றன. தனக்கு நேரிட்ட சம்பவங்களைப் பற்றிக் கவலைப்பட்டுக் கொண்டு விசுவ தருமத்திலிருந்து வேறு படுகிறவன் உலகத்திற்கு ஒரு புண்ணாவான். அறிவுள்ள பிராணிகள் எல்லாம் ஒரு ஜீவ அமைப்பாக இருக்கத் தன்னை வேருக நினைத்து வாழ்பவன் குலக்கோடரி யாவான்.

**34.** உலகத்தில் எதுவும் நிலையில்லை. நடந்ததெல்லாம் கதையேயாகும்; பிறகு முற்றும் மறக்கப்பட்டு மறையும். புகழோங்கி வளர்ந்தவர்களும் இப்படி மறைந்து போவார்கள். கற்றவர்கள் கதியோ சொல்ல வேண்டியதில்லை. உயிர் விட்டுக் கண் மறைந்தவுடன் யாரும் அவர்களை நினைக்க மாட்டார்கள். புகழும் பேரும் என்ன? வெறும் பேச்சு. அதற்கு உடலில்லை. ஆகையால், எது உறுதியான உண்மை? நாம் கடைப் பிடிக்கவேண்டியது எது? நடுநிலைமை, ஒப்புரவு, வாய்மை, பொறை, எது நேரிடினும் அனைத்திற்கும் ஆதியும் மூலமும் எதுவோ, அதிலிருந்து இதுவும் வந்தது. இது அவசியமே என்று எதிர்கொண்டு ஒப்புக்கொள்ளும் தன்மையே மனிதனுக்கு வேண்டியது.

**35.** உலகத்தில் பொருள்கள் மாறி மாறி மறைந்து புதுமையாய் மறுபடியும் தோன்றுவதைக் கவனித்துப் பார். பொருள்களைச் சிதையவிட்டு அவைகளிலிருந்து அவை போன்ற புதிய புதிய பொருள்களை அமைத்துத் தருவதே இயற்கைச் சக்தியின் இடைவிடாத் தொழில் என்பதை அறிவாய். இதுவே அதற்கு ஓர் ஆனந்தம். உலகத்திலிருக்கும் ஒவ்வொரு பொருளும் அதைப் போன்ற புதியன விளைவதற்கு வித்தாகும்.

**36.** சீக்கிரம் இறந்து போவாயே. இன்னும் உள்ளத்தைச் சுத்தப்படுத்திக் கொள்ளவில்லையே. சாந்தம் அடையவில்லையே. துன்பத்தைக் கண்டு அச்சம் நீங்கவில்லையே. நடுவு நிலைமையே நன்மை என்பதை இன்னும் அறியவில்லையே.

**37.** அடிக்கடி இதை நீ சிந்தித்து நினைவுக்குக் கொண்டு வருவாயாக: இந்த உலகம் முழுவதும் சேர்ந்து ஒரு ஜீவன்; ஓர் உடல்; ஓர் ஆத்மா. சகல ஜீவகோடிகளும், பொருள்களும் சேர்ந்து ஜீவநரம்பு பாய்ந்த ஒரு சரீரக் கட்டாகும். எல்லாவற்றிற்கும் உயிர் ஒன்றே. எல்லாம் சேர்ந்து உண்டாக்கினது தான் நாம் காணும் ஒவ்வொரு பொருளும். உலகத்தினின்று வேறுபட்டுத் தனியாய் எதுவும் உண்டாகாது. எல்லாம் ஒன்றோடொன்று சேர்ந்து, இடைவிடாமல் நெய்வது போலும், ஊடும் பாவும் போலும் உலகம் நடந்து வருகிறது.

**38.** பாறையின் மேல் அலைகள் மோதி மோதிப் புரண்டுகொண்டிருந்தாலும் கல்லானது அசையாமல் நிற்கும். அதைப் போல் உன் உள்ளம் அமைதி பெற்றிருக்க வேண்டும். பேரிரைச்சலுடன் அலைகள் மோதினாலும் இறுதியில் அடங்கி ஓய்ந்து கிடக்கும்.

